# பகவத் பாதை

## BAGAVATH PATHAI

• Volume : 1 • Issue : 9

• மலர் : 1 • இதழ் : 9

தமிழ் மாத இதழ்

• November 2014 • Annual Subscription Rs. 100/-

• நவம்பர் 2014 • வருடச் சந்தா ரூ. 100/-




சிந்தித்தல் மூலமாக ஏற்பட்ட சிந்தனையாக இருந்தாலும் அது தானாக மறைந்துவிடும். அதை அப்புறப்படுத்த நமதளவில் எந்த முயற்சியும் தேவையில்லை. தேவையில்லாமல் சிந்தித்துக் கொண்டிருக்கிறோம் என்பதைப் புரிந்துகொண்டால் போதும்.

- ஸ்ரீ பகவத்



## சிந்தித்தலில் இருந்து விடுபடுவது எவ்வாறு?

**(How to be free from Thinking?)**

Thought and Thinking - நினைவும் சிந்தித்தலும் என்ற தலைப்பில் நமது முதலாவது கட்டுரை, நமது முதலாவது இதழில் வெளிவந்தது. அந்தக் கட்டுரைக்கு அதிகமான வரவேற்பு இருந்த காரணத்தினால் அது புதிய வாசகர்களின் பார்வைக்காக இரண்டாவது முறையும் பிரசுரிக்கப்பட்டிருந்தது.

Thought அல்லது நினைவு என்பது தாமாக ஏற்படுவது. நமக்கு ஏற்படும் சிந்தனைகளெல்லாம் அவையாகவே - தாமாகவே ஏற்பட்டவைதாம்.

அவற்றை நாம் உருவாக்கவில்லை. நாமாக உருவாக்குவதாக இருந்தால் நமக்கு விருப்பமான சிந்தனைகளையல்லவா உருவாக்கியிருப்போம். ஆனால் அவையாவும் அவை போக்கில் நமது விருப்பங்களையும் மீறி ஏற்படுகின்றன. இப்படி அவையாக ஏற்படும் நினைவுகளைத் தான் சிந்தனை என்று கூறுகிறோம்.

சில சிந்தனைகளை நாமாகவும் உருவாக்குகிறோம். வெளியூருக்கு பயணம் மேற்கொள்கிறோம். எந்த வாகனத்தில் பயணம் செய்வது, எந்த இடத்தில் தங்குவது, எத்தனை நாள் தங்குவது, என்ன வேலைகளையெல்லாம் முடிப்பது

- என்பதையெல்லாம் நாமாகத்தான் சிந்தித்து முடிவெடுக்கவேண்டும்.

இது சம்பந்தமான சிந்தனைகள் அவையாக ஏற்படாது. நாமாக சிந்தித்துதான் அந்த சிந்தனைகளைக் கொண்டு வரவேண்டும்.

இப்படி நாமாக சிந்தித்து ஏற்படுத்துவதைத்தான் சிந்தித்தல் - Thinking என்று கூறுகிறோம்.

சிந்தனைகளுக்கு நாம் பொறுப்பல்ல; ஆனால் சிந்தித்தலுக்கு நாமே பொறுப்பு.

சிந்தனைகள் ஏற்படும்போதெல்லாம் அந்த சிந்தனை சம்பந்தப்பட்ட உணர்ச்சிகளும் நம் மனதில் ஏற்படத்தான் செய்யும்.

அந்த சிந்தனைகளிலிருந்தும், அவற்றால் ஏற்பட்ட உணர்ச்சிகளிலிருந்தும் விடுபட நாம் என்ன செய்யவேண்டும்?

நாம் எதுவும் செய்யத்தேவையில்லை. அவையாக ஏற்பட்ட சிந்தனைகளும் உணர்ச்சிகளும் அவையாகவே மறைந்து போய்விடும். அவற்றை அப்புறப்படுத்தும் முயற்சி எதுவும் தேவையில்லை.

தானாக ஏற்படும் சிந்தனைகள் சிலவற்றை நாமாக விரும்பி கையில் எடுத்துக் கொள்கிறோம். அப்படி அதனை நாமாகக் கையில் எடுத்துக்கொள்ளும்போது அது சிந்தித்தலாக மாறிவிடுகிறது. Thought ஆக இருந்தது Thinking ஆக மாறிவிடுகிறது.

இப்போது அதனை, தானாக ஏற்பட்ட ஒன்றாக எடுத்துக் கொள்ளமுடியாது. அது நம்மால் உருவாக்கப்பட்ட 'சிந்தித்தலாக' மாறிவிட்டது.

அது Thought ஆக இருக்கும்வரை, நாம் அதிலிருந்து விடுபட எதையும் செய்யத்தேவையில்லை. ஆனால் அது Thinking ஆக மாறிய பிறகு நாம் என்ன செய்வது?

சிந்தனையிலிருந்து விடுபட நாம் எதையும் செய்யத்தேவையில்லை. ஆனால் சிந்தனையை சிந்தித்தலாக மாற்றிவிட்டோம். இப்போது சிந்தனைக்குப் பதிலாக சிந்தித்தல் தான் இருக்கிறது.

சிந்தனையாக இருந்தது சிந்தித்தலாக மாற்றிவிட்டோம். Thought ஐ Thinking ஆக மாற்றிவிட்டோம்.

இந்த சிந்தித்தலிருந்து விடுபடுவது எவ்வாறு? இந்த Thinking லிருந்து விடுபடுவது எவ்வாறு?

- நமது கட்டுரையைப் படித்த அன்பர் ஒருவர் இப்படி ஒரு கேள்வியை எழுப்பினார்.

சிந்தனையிலிருந்து விடுபடும் பொறுப்பு நமக்கு இல்லாமலிருக்கலாம். ஆனால் சிந்தித்தலிலிருந்து விடுபடவேண்டிய பொறுப்பு நமக்கு உள்ளதல்லவா?

நாம் எந்தத் தவறும் செய்யவில்லை. ஆனால் நாம் தவறு செய்ததாக நம்மீது அபாண்டமாக நமது மேலதிகாரி குற்றம் சுமத்துகிறார். இதனால் நம்முடைய மனம் பாதிக்கப்படுகிறது.

"இப்படிக் குற்றம் கூறுகிறாரே" - "நாம் ஒரு தப்பும் செய்யவில்லையே"

- என நம்முடைய மனதில் அது சார்ந்த சிந்தனைகள் அலை அலையாக வந்து நமது நிம்மதியைக் குலைக்கின்றன; தூக்கத்தைக் கெடுக்கின்றன.

இதனால் நம்முடைய மனவேதனையும் புதுப்பிக்கப்படுகின்றது.

இவையெல்லாம் சிந்தனைகள். அவையெல்லாம் அவையாக வந்தவை.

இந்நிலையில் நாம் நாமாக அந்த சிந்தனைகளுக்குள் நுழைகிறோம். இந்த சிந்தனைகளை நிறுத்தப்பார்கிறோம். அல்லது அந்த சிந்தனைகளைக் கையில் எடுத்துக்கொண்டு அந்த அதிகாரியை எப்படியாவது பழிவாங்க வேண்டும் என சிந்திக்க ஆரம்பிக்கின்றோம்.

இப்படி சிந்தனையை சிந்தித்தலாக மாற்றிவிடுகிறோம்.

- Thinking ஆக மாற்றி விடுகிறோம்.

சிந்தனையிலிருந்து விடுபட நாம் எதுவும் செய்யத்தேவையில்லை.

ஆனால் சிந்தித்தலிலிருந்து நாம் விடுபட ஏதாவது செய்ய வேண்டாமா?

அந்த அன்பருடைய கேள்வி நியாயமானது தானே?

சிந்தித்தலிலிருந்து நாம் எவ்வாறு விடுபடுவது?

- Thinking லிருந்து நாம் எவ்வாறு விடுபடுவது?

அகத்தில் ஏற்படும் அக நிகழ்வுகள் ஒருவகையாகவும்,

புறத்தில் ஏற்படும் புற நிகழ்வுகள் இன்னுமொரு வகையாகவும் உள்ளன.

நம் மனதில் ஏற்படும் நிகழ்வுகள் அனைத்தும் அக நிகழ்வுகளாகும். நம் மனதில் ஏற்படும் சிந்தனைகளும், உணர்சிகளும் அக நிகழ்வுகளாகும்.

புறத்தில் எத்தனையோ செயல்களும், நிகழ்ச்சிகளும் நடக்கின்றன.

இவை யாவும் புற நிகழ்வுகளாகும்.

அலமாரியிலிருந்த ஒரு புத்தகத்தை எடுத்து மேஜையின்மீது வைக்கிறோம்.

மேஜையில் வைத்த புத்தகம் என்ன ஆகும்? அது அங்கிருந்து எங்காவது செல்லுமா? அல்லது அது திடீரென்று அங்கிருந்து மறைந்துவிடுமா?

அது, வைக்கப்பட்ட இடத்திலேயே இருக்கும். அதுவாக எங்கேயும் போகாது. எவராவது அதனை எடுத்துச் சென்றால் மட்டுமே அது அங்கிருந்து போகும்.

ஆனால் நம் அகநிகழ்வுகள் எவையும் அப்படி அல்ல.

நமக்கு ஏற்பட்ட சிந்தனைகளும், உணர்ச்சிகளும் அப்படியே இருக்காது. ஒவ்வொரு சிந்தனை மற்றும் உணர்ச்சியின் ஆயுள் வெறும் அரை வினாடிக்கும் குறைவானதே.

அவை அனைத்தும் தோன்றிய வினாடியிலேயே மறைந்துபோய்விடும். அவற்றை நாமாக அப்புறப்படுத்த தேவையில்லை.

சிந்தனை - Thought ன் நிலை இப்படி.

ஆனால் சிந்தித்தலின் நிலை என்ன?

Thinking இன் நிலை என்ன?

அதுவும் இப்படி நொடிப்பொழுதில் மறைந்துவிடுகிறதா? அல்லது நாமாக கொண்டுவந்த சிந்தித்தலை நாமாகத்தான் அப்புறப்படுத்த வேண்டுமா?

நாமாக அதனை அப்புறப்படுத்தாவிட்டால் அது அப்படியே இருந்து கொண்டிருக்குமா?

அகத்தைப் பொறுத்த அளவில் அனைத்தும் அவையாகவே மறைந்துவிடும்.

சிந்தனையை நாம் சிந்தித்தலாக மாற்றிவிட்ட காரணத்தால் அது அப்படியே இருந்து கொண்டிருக்காது.

சிந்தனை என்பது தானாக உருவான ஒன்றைக் குறிப்பதாகும். சிந்தித்தல் என்பது நாமாகச் செய்யும் செயல்.

சிந்தித்தல் என்னும் செயலால் ஏற்படும் விளைவு என்ன?

சிந்தித்ததால் ஏற்படுகின்ற விளைவும் ஒரு சிந்தனையே தான்.

இந்த வகையில் நாம் பார்க்கும்போது சிந்தனையே இருவகையாக அமைந்திருப்பதைப் பார்க்க முடிகிறது.

முதலாவது வகையான சிந்தனையானது நம்முடைய பங்களிப்பு இல்லாமல் அதுவாக ஏற்படுகிறது.

இரண்டாவது வகையான சிந்தனை என்பது நாம் பங்கேற்று சிந்திப்பதால் ஏற்படுகிறது.

ஆனால் இரண்டுமே சிந்தனைகள்தாம். இரண்டுமே Thought கள்தாம்.

சிந்தனை என்பது எப்படி வந்தாலும் சரி, அது தானாக வந்தாலும் சரி, நாம் சிந்தித்ததால் வந்தாலும் சரி

அதன் ஆயுள் அரைவினாடிக்கும் குறைவானதே.

அதனை நாம் அப்புறப்படுத்தத் தேவையில்லை.

அது எந்த வகையான சிந்தனையாக இருந்தாலும் சரி,

அது தானாகவே மறைந்துவிடும்.

சிந்தித்தல் என்பது சிந்தனை அல்ல. அது ஒரு செயல்.

சிந்தித்தல் மூலமாக ஏற்பட்ட சிந்தனையாக இருந்தாலும் அது தானாக மறைந்துவிடும். அதை அப்புறப்படுத்த நமதளவில் எந்த முயற்சியும் தேவை இல்லை.

தேங்கி நிற்கும் நீரின் மீது உங்களுடைய விரலால் உங்கள் பெயரை எழுதுவதாக வைத்துக்கொள்வோம். நீங்கள் எழுத எழுத எழுத்துகள் அங்கு ஏற்படத்தான் செய்யும்.

ஆனால் அந்த எழுத்துகள் என்ன ஆகும்?

நீங்கள் எழுத எழுத அவையும் மறைந்துகொண்டே இருக்கும்.

அது தொடரவேண்டுமானால் மீண்டும் மீண்டும் எழுதிக்கொண்டுதான் இருக்கவேண்டும்.

நீங்கள் எழுதியதை நிறுத்திக்கொண்டால் எழுதி முடித்ததும் இல்லாமல் போய்விடும்.

சிந்தித்தல் என்னும் செயலை நாமாக மீண்டும் மீண்டும் கையில் எடுக்காமல் இருந்தால் போதும்.

சிந்தித்தலால் ஏற்பட்ட விளைவுகளிலிருந்து விடுபட வேண்டும் என்ற அவசியம் எதுவும் இல்லை.

தேவையில்லாமல் சிந்தித்துக் கொண்டிருக்கிறோம் என்பதைப்புரிந்து கொண்டால் மட்டும் போதும்.

அதனை சீர் செய்யவேண்டிய எந்தக் கடமையும் நம்மிடம் கிடையாது.



## ஆசிரியர் பகுதி

அனைவருக்கும் இந்த சக பயணியின் வணக்கம்.

நமது பகவத் ஐயாவின் சிறப்புரை நிகழ்ச்சி 2-11-2014 அன்று நமது ஸ்ரீ பகவத் மிஷன் சென்னை மையத்தில் "எல்லாக் கவலைகளையும் எப்படி தீர்ப்பது?" என்ற தலைப்பில் மிகச் சிறப்பாக நடைபெற்றது.

மேலும் 14-11-14 மாலை முதல் 16-11-14 மதியம் வரை நெரூரில் ஞானமுகாம் மிகவும் சிறப்பாக நடைபெற்றது. இதில் பல புதிய அன்பர்கள் உட்பட 150 பேர் கலந்துகொண்டனர். இந்த ஞானமுகாமில் ஐயாவின் புதிய நூலான "Divine You" என்ற ஆங்கில நூல் வெளியிடப்பட்டது. இந்நூலை பகவத் ஐயா அவர்கள் வெளியிட நமது பகவத் மிஷனின் Divine Creator என்று அழைக்கப்படும் திரு. ரவிசங்கர் அவர்கள் பெற்றுக்கொண்டார். அதேபோல் 2015 ஆம் ஆண்டு புதிய காலாண்டரை ஐயா அவர்கள் வெளியிட ஸ்ரீ பகவத் மிஷன் பரமத்தி வேலூர் மையத்தின் தலைவர் திரு. ராஜகோபால் அவர்கள் பெற்றுக்கொண்டார். இந்த ஞானமுகாமை மிகச்சிறப்பாக ஏற்பாடு செய்து பலரையும் பயனடைய செய்த பரமத்தி வேலூர் மைய அன்பர்கள் திரு. இராஜகோபால், திரு. பாலசுப்ரமணி, திரு. மோகன் மற்றும் திரு. சுவாமிநாதன் அவர்களுக்கும், நாகப்பட்டிணம் முத்துச்செல்வன், மதுரை சிவக்குமார், கோதண்டபாணி அவர்களுக்கும் நமது மனமார்ந்த நன்றியை தெரிவித்துக்கொள்வோம்.

நமது ஞானமுகாமில் கலந்துகொள்பவர்கள் புதிய அன்பர்களாக இருந்தாலும் அவர்கள் ஞானத்தெளிவை மிக விரைவில் அடைந்துவிடுகின்றனர். இதைப்பார்க்கும்போது, ஐயாவின் நூல்களைப் படிப்பது, சிறப்புரைக் கூட்டத்தில் கலந்து கொள்வதோடு அல்லாமல் அனைவருமே ஐயாவின் ஞானமுகாமில் ஒரு முறையாவது கலந்துகொள்வது அவசியம் எனத் தெரிகிறது. நமது பகவத் பாதை E-mail மூலமாக சென்று சிங்கப்பூர், மலேசியா, துபாய், ஜெர்மன் என கடல் கடந்து சென்று ஞானத்தை வழங்கி வருகிறது. அந்த வகையில் சிங்கப்பூரை சேர்ந்த திரு. கார்த்திகேயன், திரு. சிவா மற்றும் திரு. பாலமுருகன் ஆகிய மூவரும் நமது பகவத் பாதையில் நம்மோடு பயணித்து பயன் பெற்றதோடு அல்லாமல் "யாம் பெற்ற இன்பம்; பெறுக இவ்வையகம்" என்ற உயர்ந்த நோக்கில் சிங்கப்பூரில் உள்ள தேடுதல் கொண்ட அன்பர்களை ஒன்றிணைத்து சிங்கப்பூரிலேயே நவம்பர் 21-ம் தேதி முதல் 23-ம் தேதிவரை பகவத் ஐயாவின் ஞானமுகாமையும் சிறப்புரைக் கூட்டத்தையும் ஏற்பாடு செய்துள்ளனர்.

நமது பகவத் ஐயாவால் எளிமையாக்கப்பட்ட இந்த உயர்ந்த ஞானம் உலகெங்கும் சென்று அனைவரின் துன்பத்தையும் போக்கி விடுதலையை வழங்கவேண்டும் என்பது இயற்கையின் திட்டம்.

நாம் அனைவரும் இயற்கையின் ஓர் அங்கமாக இருந்து செயல்படுவோமாக.

அன்புடன்,

K.S. ஜீவமணி, ஆசிரியர்,
செல் : 97891-65555

## திருவண்ணாமலையில் ஐயாவின் சத்சங்கம்

01-12-2014 முதல் 30-12-2014 வரை தினம் காலை 10 மணிமுதல் 12 மணிவரை ஸ்ரீ பகவத் ஐயாவின் சத்சங்கம் கீழ்க்கண்ட முகவரியில் நடைபெற்றுக்கொண்டிருக்கிறது. ஆர்வமுள்ளவர்கள் கலந்துகொள்ளுமாறு கேட்டுக்கொள்கிறோம். அனுமதி இலவசம்.

இடம் : 108/21, செங்கம் ரோடு, TSR நகர், யோகிராம் சுரத்குமார் ஆஸ்ரமம் பின்புறம், திருவண்ணாமலை-606603.

செல் : 9944215677





# ஓஷோவின் பார்வையில் ஞானம்

## - பயத்தை புரிந்து கொள்ளுங்கள்

பயத்தை அடிமைப்படுத்த முடியாது. பயத்தைக் கொல்ல முடியாது. புரிதல் மட்டுமே இங்கு தேவை. புரிதல் மட்டுமே மாற்றத்தைக் கொடுக்கின்றது.

பயத்தை அடக்க முடியாது. அடக்கலாம். மனதிலிருந்து முயற்சி செய்து அதை அடக்கலாம். ஆனால் அது ஆழமாக உள்ளே தெரியாமல் பதிந்து விடும். அங்கிருந்து கொண்டே உன்னை, உனக்குத் தெரியாமல் ஆட்படுத்தும்.

பயத்தைக் கொல்லவும் முடியாது. ஏனெனில் பயம் ஒரு சக்தியை உள்ளடக்கி உள்ளது. உங்களுக்குத் தெரியும். சக்தியை உண்டாக்கவும் முடியாது. அழிக்கவும் முடியாது. மாற்றத்தான் முடியும்! பயப்படும் பொழுது, நமக்கு நிறைய சக்தி கிடைப்பதைப் பார்த்திருப்பீர்கள்! பயத்தில் நாம் ஓடும் பொழுது, நாம் ஒலிம்பிக் ரெகார்டைக் கூட முறியடித்து விடுவோம். அதே போலத்தான் கோபமும். கோபம் வன்முறையை உள்ளடக்கியது. பயம் வன்முறையற்றது. கோபம் வரும் பொழுது, நமது சக்திக்கு மீறிய செயல்களைக் கூட நம்மால் செய்ய முடியும்.

பயம் சக்தியை உள்ளடக்கியது. நம்மில் எதிர்காலத்தில் "இது வேண்டும், அது வேண்டும்" என்ற எந்த ஆசையும் இல்லையெனில் பயம் வராது. சொர்க்கத்திற்கு செல்ல வேண்டும் என்ற ஆசை இல்லையெனில், பயம் வராது! எங்கேயும் போக வேண்டாம், எதையும் அடைய வேண்டாம் என்று இருந்தாலே பயம் வராது!

நீங்கள் இந்த ஷணத்துக்கு ஷணம் வசித்தீர்களானால், பயமே வராது! பற்று, பந்தம் இல்லாமல் இருங்கள், பயமே வராது. பயம் இல்லாத போது அதில் முடங்கி விடும் சக்தி உங்களை ஆக்கமுடையவராக மாற்றி விடும்!

இறப்பதற்கு பயப்படுகின்றீர்களா! புத்தர் சொல்கின்றார் "உன்னால் இறக்கமுடியாது! ஏனெனில் நீயே இல்லை! பின் எப்படி?" உன்னுள் நுழைந்து பார்! உன்னுடைய தன்முனைப்பு (Ego) தான் இறப்பைப் பற்றிய பயத்தை உண்டாக்குகின்றது. உள்ளே நீங்கள் இல்லை! தன் முனைப்பு இல்லையெனில் இறப்பும் இல்லை. நீங்கள் ஓர் ஆழ்ந்த மௌனம், இறப்பின்மை, நிரந்தரம், எல்லையற்ற தன்மை, உருவமின்மை, "நான்" என்ற மாசற்ற தன்மை!

சக்தியை மாற்றத்தான் முடியும். அழிக்க முடியாது. நம்மால் ஒரு சிறிய கல்லைக்கூட அழிக்கமுடியாது! ஆனால் பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளாக மக்கள் பயத்தை அழிக்க முயற்சி செய்து கொண்டேயிருக்கின்றார்கள். பயத்தை மட்டுமல்ல பொறாமை, கோபம், காமம் என எல்லாவற்றையும் அழிக்க முயற்சிகள் செய்கின்றனர்! என்ன நடந்தது? அழிக்க முடிந்ததா? இல்லை! வாழ்க்கை குழப்பமானது தான் மிச்சம்.

என்ன செய்ய வேண்டும். முதலில் புரிதல் வேண்டும். பயம் என்றால் என்ன என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும். எங்கிருந்து வருகின்றது? எவ்வாறு வருகின்றது? அதன் நோக்கம் என்ன? ஒரு தீர்ப்பு எதுவும் அளிக்காமல் கவனியுங்கள். அதைப் பழிக்காதீர்கள்! தீர்ப்பு சொல்லாதீர்கள்! மதிப்பிடாதீர்கள்! பயம் என்பது உண்மை. அதைப் புரிந்து கொள்வதன் மூலமே அதை மாற்றமடைய செய்ய முடியும். உண்மையில், புரிதல் மூலமாகத்தான் மாறுகின்றது. வேறு எதுவும் செய்யத் தேவையில்லை!

பயம் என்பது என்ன? பயம் என்பது ஒரு ஆசையை ஒட்டி உள்ளது. நீங்கள் பணக்காரனாக விரும்புகின்றீர்கள்! அதிகாரமிக்கவனாக விரும்புகின்றீர்கள்! புகழ் பெற்றவனாக மாற விரும்புகின்றீர்கள்!

மாறாக இவைகள் கிடைக்கவில்லை. உங்களுக்கு வெற்றி கிடைக்கவில்லை என்றால், நடுங்க ஆரம்பிக்கின்றீர்கள்! பயம் வந்து விடுகின்றது. பயம் என்பது ஒரு பொருளுக்கு உடையவனாக இருக்க வேண்டும் என்ற எதிர்ப்பார்ப்பின் மூலம் உண்டாகின்றது. அதே நேரத்தில் அந்த உடைமை வேண்டாம் என்றால் பயமே இல்லை!

ஞாபகம் வைத்துக்கொள்ளுங்கள் பயம், கோபம் இவைகளை அடக்கவும் முடியாது, வெல்லவும் முடியாது. அவைகளைப் புரிந்துகொள்ளத்தான் முடியும்.

புரிதல் மட்டுமே உங்களுடைய அணுகுமுறையாக இருக்கட்டும்! - நன்றி ; ஓஷா நூலிலிருந்து

பயம், கோபம், கவலை போன்ற அனைத்து அக உணர்ச்சிகளையும் எதிர்த்து போராடி எதுவும் செய்ய முடியாது என்பதை புரிந்து கொள்வதே சரியான புரிதல்.

இந்த புரிதலே அக உணர்ச்சிகளோடு போராடாத சரணாகதியை (சும்மா இருத்தல்) கொடுக்கிறது.

அக உணர்ச்சிகளின் இயற்கையான ஓட்டத்தில் குறிக்கிடாதபோது அவை அனைத்தும் தடையில்லாமல் பிரவாகமாக ஓடி மறைந்து விடுகிறது.

## ?கேள்வி பதில்¿

கேள்வி : நான் ஓர் அரசு அதிகாரி, என்னுடன் பணிபுரியும் உயர் அதிகாரிகள் பலருடன் எனக்கு நல்ல நட்பு உண்டு. என்னால் முடிந்த நல்ல உதவிகளை எல்லோருக்கும் செய்வது எனது வழக்கம். இதுவரை பணிமாற்றம் என்பது எனக்கு எந்த ஊர் வேண்டுமோ அந்த ஊருக்கு பணிமாற்றம் கிடைக்கும், அந்த அளவிற்கு எனது தேவைகளை உயர் அதிகாரிகள் எனக்காக செய்து கொடுப்பார்கள். ஆனால் தற்போது எனக்கு அடுத்த நிலையில் பணிபுரியும் பெண்மணி எனக்கு மாற்றலாகி கிடைக்க வேண்டிய ஊரை ஓர் மத்திய அமைச்சரின் சிபாரிசில் என்னுடைய இடத்தைப் பறித்துக் கொண்டார். இதனால் என்னை மிகவும் சிக்கலான அதிகம் தொந்தரவு உள்ள பகுதிக்கு மாற்றம் செய்துள்ளார்கள். இதை என்னால் ஏற்றுக் கொள்ளவே முடியவில்லை. உயர் அதிகாரிகளிடமிருந்தும் எனக்கு எந்த உதவியும் கிடைக்கவில்லை. எனக்கு மிகுந்த மனவேதனையும், பயமும் இருக்கிறது. நான் புதிய இடத்திற்கு மாற்றலாகியும் பணிக்கு செல்லாமல் மருத்துவ விடுப்பின் மூலம் 20 நாட்கள் விடுப்பு எடுத்துள்ளேன். இந்த சிக்கலான சூழ்நிலையை நான் எப்படி எதிர்க்கொள்வது?

பதில் : அவர் ஒரு அரசு அதிகாரி. உயர் பதவியில் இருப்பவர். நல்ல உள்ளம் கொண்டவர். உயர் அதிகாரிகளுக்கு தேவையான உதவிகளை செய்வதின் மூலம் இவருக்கு எப்போதும் உயர் அதிகாரிகளிடம் நல்ல மதிப்பு உண்டு. தன்மேல் எப்போதும் யாரும் எந்த குற்றமும் கூறி விடக்கூடாது என்பதில் விழிப்பாக இருக்க கூடியவர். ஓர் ஆன்மிக அமைப்பில் தவம், பயிற்சிகள் என அனைத்தையும் முறையாக மேற்கொள்ளக் கூடியவர். பல சித்த சக்திகளோடு தொடர்புடையவர்.

மூன்று ஆண்டுக்கு ஒருமுறை பணிமாற்றம் என்பது அரசு துறையில் எல்லோருக்கும் உண்டு. உயர் அதிகாரிகளிடம் இவருக்கு இருந்த நல்ல பழக்கத்தின் காரணமாக வேண்டிய ஊர் இதுவரை கிடைத்தது. இப்படிபட்ட சூழ்நிலையில் இவருக்கு அடுத்த நிலையில் பணிபுரியும் பெண்மணி மத்திய அமைச்சரின் சிபாரிசுடன் இவருடைய இடத்தை பிடித்துக்கொண்டார். இதை அதிகாரியால் தாங்கி கொள்ளவே முடியவில்லை. உயர் அதிகாரிகள் அத்தனை பேரையும் முயற்சிசெய்து பார்க்கிறார். எந்த வாய்ப்பும் கிடைக்கவில்லை. 20 நாட்கள் மருத்துவ விடுப்பு எடுத்துக்கொண்டு ஆன்மிக அமைப்பே கதி என்று தவம் செய்வது, மௌனம் மேற்கொள்வது என 3 நாட்களாக இருந்து வருகிறார். நண்பர் ஒருவர் மூலம் "பயமும், விடுதலையும்" என்ற 'பகவத் பாதை' இதழ் கிடைக்கிறது. பிறகு அவர் நம்மை தொடர்பு கொள்கிறார்.

அதிகாரி, "இப்போது எனக்கு பயமும், வெறுப்பும் அதிகமாக உள்ளது. எந்த உதவியும் கிடைக்கவில்லையே என்ற மனவருத்தம் அதிகமாக இருக்கிறது. இந்த புதிய சூழ்நிலையை என்னால் முற்றிலுமாக ஏற்றுக்கொள்ள முடியவில்லை. எதாவது போன் அடித்தாலே நமக்கு தான் என்று ஒரே பதட்டமாகவும், படபடப்பாகவும் இருக்கிறது. என்னால் யாரும் சிரமப்படக்கூடாது என்று நினைப்பவன். என்னுடைய ஆபிஸ் வேலைக்கு கூட காலை 10 மணிக்கு 7-30 மணிக்கே வீட்டைவிட்டு கிளம்பி விடுவேன். வழியில் எந்த பதட்டமும், படபடப்பும், தடங்கலும் இல்லாமல் போக வேண்டும் என்பதற்காக. நான் குடும்பத்துடன் A/C Carல் பயணம் மேற்கொள்ளும்போது எனக்கு மட்டும் வேர்த்து வேர்த்து கொட்டும். நான் Car ஓட்டும் போது பேசக்கூடாது என்று திட்டுவேன் என்னுடைய கவனம் சிதறிவிடும் என்பதற்காக. ஆனால் என்னை தவிர மற்றவர்கள் எல்லோரும் மகிழ்ச்சியாக தான் இருப்பார்கள். நான் பகவத் ஐயாவின் புத்தகம் எதுவும் படித்தது கிடையாது. இந்த நிலையில் பகவத் ஐயாவின் புரிதல் எனக்கு உதவி செய்யுமா?" எனக்கேட்டார். "எப்படியும் நீங்கள் மருத்து விடுப்பில் தான் இருக்கிறீர்கள். நீங்கள் ஞானமுகாமில் கலந்து கொள்ளுங்கள் எப்படியும் உங்களுக்கு உதவியாக தான் இருக்கும்" என்று கூறினேன்.

ஞான முகாம் முதல் நாள் அமைதியாக போய் கொண்டு இருந்தது. இரண்டாம் நாள் அகம், புறம் உரைக்கு பிறகு நல்ல ஓர் தெளிவுக்கு வந்து விட்டார். மற்ற அன்பர்களின் கலந்துரையாடலும் ஐயாவின் கேள்வி பதிலும் இவருக்கு ரொம்பவே உதவியாக இருந்தது. "அகம், புறம் எளிமையாக புரிந்து கொள்ள ஓர் உதாரணம் கூறுங்கள் ஐயா" என்றார் அதிகாரி.

பகவத் ஐயா அதற்கு "நீங்கள் ஒரு Carஐ Start செய்கிறீர்கள். Engine Start ஆகிவிடுகிறது. Gear மட்டும் போடாமல் Carஐ ஓட்டி செல்லவேண்டும் என்பதற்காக Accelerator ஐ அழுத்துகிறீர்கள். Car சத்தம் போடுகிறதே தவிர ஒரு அடிக்கூட நகரவில்லை. எதிரே வரும் வாகனத்திற்காக பிரேக் அடிக்கிறீர்கள். Car இருந்த இடத்திலேயே தான் இருக்கிறது. எதிரே வரும் நபர்கள், மற்றும் வாகனங்களுக்கு தகுந்த மாதிரி Steering ஐ இடதுபுறமும், வலது புறமும் திருப்பி, திருப்பி பார்க்கிறீர்கள். Car எந்த பக்கமும் திரும்பவில்லை. Accelerator ஐ அழுத்துவதாலும், பிரேக்கை அடிப்பதாலும் Engine சூடு ஆகுமே தவிர Car ஒன்றும் நகரப்போவதில்லை.

இதே போல் தான், நீங்கள் புதியதாக பணி மாற்றலாகி உள்ள இடத்திற்கு செல்லாமல் நீங்களாகவே மனதில் இப்படி ஆகிவிடுமோ அப்படி ஆகிவிடுமோ என்று வருத்தப்படுவதினாலோ அல்லது ஏதாவது பிரச்சனை ஏற்பட்டு விட்டால் எப்படி சரி செய்வது என்று மனதில் சதா யோசிப்பதினாலோ மனம் கொதிப்படையுமே தவிர செயல் எதுவும் நடக்கப் போவதில்லை, இதுதான் அகம்.

எப்போது நாம் Car ன் Gearஐ போடுகிறோமோ அதன் பிறகு தான் கிளட்ச், பிரேக், ஆக்ஸிலேட்டர், ஸ்டேரிங் என எல்லாவற்றிற்கும் வேலை. அதே போல் எதிரே வரும் வாகனங்கள், நபர்கள் என எல்லாவற்றையும் கவனிக்கும் பொறுப்பு நமக்கு உண்டு. அப்படி நாம் Car ஓட்டும் போது முடிந்த வரை எவ்வளவு கவனமாக ஓட்டமுடியுமோ அவ்வளவு கவனமாக ஓட்ட வேண்டும். நாம் பயணம் மேற்கொள்ளும் பாதை போக்குவரத்து நிறைந்த சாலையாக இருந்தால் மெதுவாகவும் NH ரோடாக இருந்தால் நல்ல வேகமாகவும், கவனத்துடனும் Carஐ ஓட்ட வேண்டும். இது தான் புறம்.

நீங்கள் எப்போது புதியதாக மாற்றப்பட்ட இடத்திற்கு சென்று உங்களுடைய பொறுப்புகளை ஏற்றுக் கொண்டு செயல்படுகிறீர்களோ, அப்போது தான் செயல் என்னும் Gearஐ போடுகிறீர்கள். அதன் பிறகு நீங்கள் பணி நிமித்தமாக சந்திக்கும் ஒவ்வொருவரும் எப்படி நடந்து கொள்கிறார்கள் என்பதை கவனத்தில் கொண்டு உங்கள் அறிவாலும், அணுகுமுறையாலும் செயல்பட்டால், நீங்கள் நிச்சயம் நல்லபடியாக வேலையை செய்து முடிப்பீர்கள். இப்படி நாம் செயலில் கவனத்துடன் செயல்படும் போது எந்த சூழ்நிலைக்கு எப்படியெல்லாம் செயல்படுவது என்பது கொஞ்ச நாட்களில் உங்களுக்கே இயல்பாக புறத்தில் வந்துவிடும்" என்றார் ஐயா.

அதற்கு அதிகாரி "மனதில் மட்டும் சதா இப்படி ஆகி விடுமோ அல்லது அப்படி ஆகிவிடுமோ என்று யோசிப்பதால் மனம் தான் கொதிப்படைகிறதே தவிர செயல் எதுவும் நடைபெறுவதில்லை. எனக்கு ஏற்படுகிற சூழ்நிலையைக் கண்டு நான் பயப்படுவதை விட அந்த சூழ்நிலைக்கு எனது அறிவை பயன்படுத்தி என்னால் எந்த அளவிற்கு செயல்களை சிறப்பாக செய்யமுடியுமோ அந்த அளவிற்கு சிறப்பாக செயல்பட வேண்டும் அப்படித் தானே ஐயா?" என்றார்.

மேலும் அதிகாரி அடுத்ததாக ஓர் கேள்வியை கேட்டார். “எனது உயர் அதிகாரிகள் சிலர் மிகவும் மோசமானவர்களாக இருக்கிறார்கள், அவர்களை நான் எப்படி எதிர்கொள்வது?” என்றார்.

அதற்கு ஐயா, "நாம் இரவு நேரம் ஓர் காட்டுப் பகுதியில் செல்ல வேண்டியுள்ளது. நமது மனதில் ஏதாவது பாம்பு இருக்குமோ என்ற பய உணர்வு ஏற்படுகிறது. அப்படி மனதில் தோன்றும் பய உணர்வுக்கு நாம் ஒன்றும் செய்ய முடியாது. அந்த பய உணர்வை புறத்தில் எதிர்கொள்ள ஒரு கம்பு, டார்ச், காலுக்கு செருப்பு என அணிந்து கொண்டு முடிந்தவரை கவனத்துடன் காட்டுப்பாதையை கடக்க வேண்டும். புறத்தில் எதிர்கொள்ள தேவையானவற்றை எடுத்துக்கொண்ட பிறகும், அகத்தில் பாம்பை பற்றிய பய உணர்வு ஏற்பட்டால் நாம் என்ன செய்ய முடியும்?. அதன்பிறகு ஏற்படும் பய உணர்ச்சிக்கு நாம் ஒன்றும் செய்யத் தேவையில்லை. நம்மால் எந்த அளவிற்கு புறத்தில் செயல்பட வாய்ப்பு உள்ளதோ, அந்த அளவிற்கு சிறப்பாக செயல்பட வேண்டும். அதற்குப் பிறகு நடப்பவற்றை ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும். அப்பொழுதுதான் அடுத்ததாக அதே போன்ற சூழ்நிலை ஏற்படும்போது முன் அனுபவம் ஒரு பாடமாக அமையும்" என்றார்.

இதற்கு அதிகாரி, “மோசமான மேல் அதிகாரிகளை நான் சந்திக்கும் போதும், அவர்கள் கீழ் வேலை பார்க்கும் போதும் எனக்கு பயமும், பதட்டமும் ஏற்படுவது இயற்கை. அப்படி மனதில் ஏற்படும் பயத்தையும், பதட்டத்தையும் அவர்களிடமிருந்து எப்படி எல்லாம் நம்மை காப்பாற்றிக் கொள்வது என்ற புறச்செயலுக்கு தூண்டுகோலாக எடுத்து பயன்படுத்திக்கொள்ள வேண்டும். மோசமான உயர் அதிகாரிகளை கண்டு பயப்படுவதை விட அவர்களை எப்படி எதிர்கொள்வது என்பதில் கவனம் செலுத்தினால் போதும் என்பதை புரிந்துக் கொண்டேன்”, என்றார் அதிகாரி.

இறுதி நாள் அன்பர்கள் அனுபவ உரையின்போது அதிகாரி தன்னுடைய பழைய நிலையை அப்படியே எடுத்துக்கூறி, தான் மேற்கண்ட உதாரணங்கள் மூலம் எப்படி எல்லாம் புரிந்துகொண்டேன் என்பதைக் கூறி இன்று ஞானமுகாம் முடித்துக்கொண்டு நாளை காலையே புதியதாக பணிமாற்றம் செய்யப்பட்ட இடத்திற்கு சென்று தன்னுடைய பொறுப்பை ஏற்றுக்கொள்வதாகவும், இதுவே நான் முதன்முதலில் மைக் பிடித்து பதட்டம் இல்லாமல் பேசியது என்றும் தன்னுடைய அனுபவத்தை கூறினார். மேலும் ஐயாவின் எல்லா புத்தகங்களையும் படித்து மேலும் தெளிவு பெற்றுக்கொள்ளப் போவதாகக் கூறி அமர்ந்தார்.

ஒரு மாதத்திற்கு பிறகு உயர் அதிகாரிகள் பலரையும் சிறப்பாக எதிர்கொண்டதாகவும், மனதில் பய உணர்வு ஏற்பட்டாலும், அதை புறத்துக்கு தூண்டுகோலாக எடுத்து செயல்படுத்தி சிறப்பான பல செயல்கள் செய்ததாகவும் கூறினார். இதனால் உயர் அதிகாரிகள் பலரும் "இவரைப் போல் சிறப்பாகப் பணியாற்ற வேண்டும்" என்று மற்ற அதிகாரிகளுக்கு கூறியதாகவும், Tension அதிகாரி என்ற தன்னுடைய பழைய பெயர் மாறி சிறந்த அதிகாரி என்ற நிலைக்கு வந்ததாகவும் கூறினார்.

எந்த ஒன்றை புரிந்து கொண்டால் வேறு எதையும் புரிந்துகொள்ள தேவையில்லையோ அதுவே இந்த ஞானப் புரிதல் ஆகும்.

V.A.P. சரவணன், சேலம்.
செல் : 99942-05880

## சத்சங்கம்

சென்னை ஸ்ரீ பகவத் மிஷன் மையத்தில் ஒவ்வொரு வாரமும் ஞாயிற்றுக்கிழமை மாலை 5-30 மணி முதல் 7-00 மணி வரை ஐயாவின் கருத்துகளில் ஈடுபாடு கொண்ட அன்பர்கள் கூடி சத்சங்கம் நடைபெற்றுக் கொண்டு வருகிறது. வாய்ப்புள்ள அன்பர்கள் கலந்து கொண்டு பயனடைய அழைக்கிறோம்.

இப்படிக்கு,

ஸ்ரீ பகவத் மிஷன், சென்னை மையம்,
23/10, பழைய பரோடா வங்கி தெரு, செக்ரட்ரியேட் காலனி, அம்பத்தூர், சென்னை-600053.
செல் : 9884097438, 9381019479, 9444756744

ஐயாவின் அனைத்து நூல்களும் இங்கு கிடைக்கும்.

# பகவத் பாதை சந்தா விபரம்

பகவத் பாதை மாத இதழுக்கு சந்தா செலுத்த விரும்புபவர்கள் கீழ்காணும் ஏதேனும் ஒரு வழியில் செலுத்தலாம்.

ஓர் ஆண்டு சந்தா - ரூ. 100/-

ஐந்தாண்டு சந்தா - ரூ. 500/-

ஆயுள் சந்தா - ரூ. 1000/-

சந்தா தொகையை "Sri Bagavath Mission" என்ற பெயரில் M.O. அல்லது சேலத்தில் செல்லதக்க D.D. (or) Cheque அனுப்பலாம்.

www.pravaagam.org என்ற இணைய தளத்தில் Credit Card / Debit Card மூலமாகவும் சந்தா செலுத்தலாம்.

வங்கி கணக்கில் நேரடியாக செலுத்துபவர்கள் HDFC Bank-ல் Sri Bagavath Mission A/c No. 15907620000075, NEFT IFSC : HDFC 0001590 என்ற கணக்கில் செலுத்தலாம்.

Bank A/C ல் நேரடியாக செலுத்தியவர்கள் உங்கள் முகவரியை 92620 61838 என்ற எண்ணிற்கு SMS மூலம் தகவல் தெரிவிக்க வேண்டுகிறோம்.

## ஐயாவுடைய நிகழ்ச்சி நிரல்

| நாள் | நிகழ்ச்சி நடைபெறும் இடம் | பொருள் | நிகழ்ச்சி ஒருங்கிணைப்பாளர் |
|---|---|---|---|
| 1-1-2015 வியாழன் | ஸ்ரீ பகவத் மிஷன் சென்னை மையம், அம்பத்தூர், சென்னை. | **"தன்னை அறியும் ஞானம்"** மாலை 5-30 to 7-30 மணி வரை | ஸ்ரீ பகவத் மிஷன் சென்னை மையம், அம்பத்தூர். செல் : 9381019473, 944402986, 9884097438, 9444756744 |
| 4-1-2015 ஞாயிறு | திருவல்லிக்கேணி, சென்னை.600 061. | **நீங்களும் ஞானியாகலாம்** மாலை 6-00 to 8-00 மணி வரை | ஸ்ரீ பகவத் மிஷன் சென்னை மையம், அம்பத்தூர். செல் : 9381019473, 944402986, 9884097438, 9444756744 |
| 24-1-2015 முதல் 26-1-2015 வரை | கொங்கு வேளாளர் பாலிடெக்னிக் கல்லூரி, சீனாபுரம், குன்னத்தூர் சாலை, பெருந்துறை. | **ஞான முகாம்** | திரு. அகமதுபாஷா -9842254148<br>திரு. கே.பி.வேலுமணி -9942233088<br>திரு. கந்தசாமி -9442225235<br>திரு. அருண் -9095623111 |

## நெரூர் ஞான முகாமில்



ஸ்ரீ பகவத் ஐயா "Divine You" என்ற புதிய ஆங்கில நூல் வெளியிட Divine Creator திரு. ரவிசங்கர் பெற்றுக்கொள்கிறோர்.



ஸ்ரீ பகவத் ஐயா 2015 புதிய காலண்டரை வெளியிட ஸ்ரீ பகவத் மிஷன் பரமத்தி வேலூர் மைய தலைவர் திரு. ராஜகோபால் பெற்றுக்கொள்கிறோர்.



ஸ்ரீ பகவத் ஐயா 2015 புதிய காலண்டரை வெளியிட ஸ்ரீ பகவத் மிஷன் திருப்பூர் மைய தலைவர் திரு. அருள்பிரகாசம் பெற்றுக்கொள்கிறோர்.



## "அனைத்திற்கும் நன்றி"

ஜென்கதை

ஒரு ஜென்குரு இருந்தார். அவருக்கு சில சீடர்களும் இருந்தனர். அவர் தன் சீடர்களுடன் ஒவ்வொரு ஊராகச் சென்று ஞான உபதேசம் செய்வது வழக்கம். அங்குள்ள மக்கள் கொடுக்கும் உணவுகளையும், ஆகாரங்களையும் பகிர்ந்து உண்டு தங்கள் பசியை போக்கி வந்தனர்.

ஒரு நாள் நல்ல உணவு கிடைக்கும், ஒரு நாள் சுமாரான உணவே கிடைக்கும். எப்படிப்பட்ட உணவு கிடைத்தாலும் எவ்வளவு உணவு கிடைத்தாலும் கிடைப்பதை ஏற்றுக்கொண்டு பகிர்ந்து உண்டு வந்தனர்.

குரு ஒவ்வொரு நாளும் இரவு உறங்கச் செல்லும்முன் கடைசியாக "இறைவா! இன்று தாங்கள் அளித்த அனைத்திற்கும் எங்கள் நன்றி" என்று கூறுவதை வழக்கமாக கொண்டிருந்தார். ஒரு ஊரில் நல்ல வரவேற்பு கிடைக்கும், ஒரு ஊரில் கண்டுகொள்ளவே மாட்டார்கள்.

அவர்களது பயணத்தில் ஒருநாள் ஒரு பெரிய காட்டை கடந்து செல்ல வேண்டியிருந்தது. எங்கு நோக்கினாலும் அடர்த்தியான மரங்களும், புதர்களும்தான் தென்பட்டன. அந்தக் காட்டினூடாக குருவை தொடர்ந்து சீடர்கள் அனைவரும் மவுனமாக நடந்து கொண்டிருந்தனர். காட்டைத்தாண்டியதும் மணல்வெளி தென்பட்டது. அதற்குப் பிறகு நெடுந்தூரம் கண்ணுக்கெட்டிய தொலைவு வரையிலும் மணற் பெருவெளிதான்.

சூரியன் உஷ்ணமாகக் காய்ந்து கொண்டிருந்தது. ஒதுங்குவதற்கு ஒருதுளி நிழல் கூட அங்கு இல்லை. வழியில் எங்காவது ஒரு கிராமம் தென்பட்டால் யாராவது அங்கு போய்ப் பிச்சை எடுத்து வரலாம். அதை எல்லோரும் பகிர்ந்து உண்ணலாம். ஆனால் எந்தக் கிராமமும் வழியில் எதிர்ப்படவில்லை. தாகத்திற்கு தண்ணீராவது குடிக்கலாம் என்றால் வழியில் எந்த ஒரு நீர் நிலையும் தென்படவில்லை.

பொழுது சாய்ந்து இருட்டியும் விட்டது. சீடர்களின் சோர்வைக் கண்ட குரு, "இங்கேயே ஓய்வெடுக்கலாம்" என்றார்.

அவ்வளவுதான்! நாள் முழுவதும் பசியிலும், தாகத்திலும் வாடிய சீடர்கள் அப்படியே சுருண்டு படுத்துவிட்டனர்.

குரு, வழக்கம்போல் உறங்கச் செல்லும் முன்பாக கடைசியாக, "இறைவா! இன்று தாங்கள் அளித்த அனைத்திற்கும் எங்கள் நன்றி" என்றார்.

இதைக் கேட்டுக்கொண்டிருந்த ஒரு சீடனுக்குக் கடுங்கோபம் வந்தது.

சட்டென எழுந்து அவன், "குருவே! இறைவன் இன்று நமக்கு ஒன்றுமே அளிக்கவில்லையே!" என்றான் அடங்காச் சினத்துடன்.

குரு சிரித்தார், "யாரப்பா சொன்னது? அவர் இன்று நமக்கு அருமையான பசியைக் கொடுத்தார்; அற்புதமான தாகத்தைக் கொடுத்தார்; அதற்காகத்தான் நான் அவருக்கு நன்றி செலுத்தினேன்" என்றார்.

"இன்பமும், துன்பமும் வாழ்க்கை என்ற நாணயத்தின் இரு பக்கங்கள். ஒன்றை ஏற்றுக்கொண்டால் மற்றொன்றையும் ஏற்றுக்கொள்ளவேண்டும் என்றுணர்ந்தவனே ஞானியாவான்".



ஜென் கதை - "அனைத்திற்கும் நன்றி"

**Registration Number of the News Paper TNTAM/2014/57698**

*If undelivered please return to:*



Sri Bagavath Mission

31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu,INDIA.

**V. A. P. Sharavanan : 99942 05880**
**Dr. N. Kailasam : 94432 90559**
**K. S. Jeevamani : 97891 65555**

www.pravaagam.org, www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com

## அழைப்பு

ஸ்ரீ பகவத் ஐயாவின் ஞானக் கருத்துக்களை பகிர்ந்துகொள்ளவும், ஐயாவின் நிகழ்ச்சிகளை அறிந்துகொள்ளவும் வசதியாக இருப்பதற்காக whatsapp group ஒன்று சென்னை நண்பர்களால் Pravaagam என்ற பெயரில் ஏற்படுத்தப்பட்டுள்ளது. இது அனைவருக்கும் பயனுள்ள வகையில் இருக்கும். ஆர்வமுள்ள அன்பர்களை இணைந்து கொள்ள அழைக்கின்றோம்.

இப்படிக்கு,
ஸ்ரீ பகவத் மிஷன், சென்னை மையம்,
23/10, பழைய பரோடா வங்கி தெரு,
செக்ரட்ரியேட் காலனி, அம்பத்தூர், சென்னை-600053.
செல் : 9884097438, 9381019479, 9444756744
ஐயாவின் அனைத்து நூல்களும் இங்கு கிடைக்கும்.

Published by Shri. V. A. P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu, India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003.
Editor : Shri. K. S. Jeevamani, Cell : 97891-65555